# ஓயாத அலைகள் 3

## நிழற்படத் தொகுப்பு

எரிமலை நவம்பர் 2000
சிறப்பு இணைப்பு

ஓயாத அலைகள் 3



**காணிக்கை**

ஓயாத அலைகள் –3 வரலாற்றுச்
சமரில் வீரச்சாவடைந்த
அனைத்து மாவீரர்களுக்கும்
இச்சிறப்பிதழ் காணிக்கை.

**ஓயாத அலைகள் –3**
**சிறப்பிதழ்**

வெளியீடு:
தாய்மண் வெளியீடு
தமிழர் ஒருங்கிணைப்புக் குழு

C/O T.C.C-France
341, Rue des Pyrénées
75020 Paris
Tel: 0033 143 58 11 42
Fax: 0033 143 58 11 91
e.mail: erimalai@freesurf.fr

# நிழற்படத் தொகுப்பு

வரலாற்றின் போக்கினைத் தீர்மானித்த புகழ்பெற்ற சமர்களின் வரிசையில் ஓயாத அலைகள்-3 நடவடிக்கைச் சமரும் இணைந்துவிட்டது. ஓயாத அலைகள் -3இன் சமர் ஒட்டுமொத்தமாக உலகின் கண்களையே திறக்க வைத்துவிட்டது. கண்கள் மட்டுமா திறக்கப்பட்டன. தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் யதார்த்தத்தை உணர மறுத்த மனங்கள், கேட்க மறுத்த செவிகள், பேச மறுத்த வாய்கள் எல்லாமே திறக்கப்பட்டுவிட்டன. இவ்வகையில் இதுவொரு கண்திறப்புச் சமர். "விதைக்குள்ளிருந்து விரியும் பெரும் விருட்சமாக" ஓயாத அலைகள் மூன்றிலிருந்து விரிகின்றது தமிழரின் விடுதலைப் பெருவாழ்வு. இவ்விடுதலை விதை பல நூற்றாண்டு கால தமிழீழத் தாய்மண்ணின் தரைக்குள் உறைநிலையில் உறங்கி இன்று விழித்தெழுந்தது. இதுவே எமது விடுதலைப் போராட்டத்தின் விந்தைமிகு வரலாறாகிவிட்டது.

1999ஆம் ஆண்டு நவம்பர் இரண்டாம் நாள் ஒட்டுசுட்டானில் ஆரம்பமாகி வன்னியில் 2500 சதுர கிலோமீற்றருக்கு அதிகமான பாரிய நிலப்பரப்பினையும், அதிஉச்ச பாதுகாப்பில் இருந்த ஆனையிறவுத் தளத்தையும், அதனைச் சூழவுள்ள தளங்களையும் தகர்த்து, யாழ் குடாநாட்டின் வடமராட்சி கிழக்கு, தென்மராட்சியின் பச்சிலைப்பள்ளி பகுதிகளை மீட்டும் தமிழீழ விடுதலைப் போராட்ட வரலாற்றில் இது வரை காலமும் பெற்றுத் தந்திராத வெற்றிகளை ஈட்டித்தந்த நடவடிக்கையாக ஓயாத அலைகள் -3 நடவடிக்கை விளங்குகின்றது.

தமிழீழத்தின் இதயபூமியாம் மணலாறு உள்ளிட்ட வடதமிழீழத்தின் பகுதிகளில் சிறீலங்கா இராணுவத்தின் ஆக்கிரமிப்பில் இருந்து மீட்டு பெருமளவிலான போராயுதங்கள் மற்றும் கலங்கள் என்பனவற்றைக் கைப்பற்றி ஓயாத அலைகள் -3 நடவடிக்கை சிறீலங்காப் படைகளின் கட்டுமானத்தில் பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியது.

சிறீலங்காப் படையின் 52, 53, 54, 55, 56, 21 ஆகிய இராணுவ பிரிகேட்டுகளுக்கும், கடற்படையின் 3 பிரிவுகளுக்கும், விமானப் படையின் இரு பிரிவுகளுக்கும் பாரிய சேதத்தை இந்நடவடிக்கை ஏற்படுத்தியது. இந்நடவடிக்கையில் 6000ற்கும் அதிகமான படையினர் கொல்லப்பட்டோ காணாமற்போயோ உள்ளனர் என சிறீலங்காப் பாதுகாப்புத் தரப்பால் தகவல் தெரிவிக்கப்பட்டது. சிறீலங்காப் படைத்தரப்பானது பெருமளவிலான படையினரின் இழப்போடு, பெருந்தொகை ஆயுத தளபாட இழப்பையும் ஓயாத அலைகள் -3 நடவடிக்கையில் சந்தித்துள்ளது.

எமது மாண்புக்குரிய தேசியத் தலைவர் மேதகு வே.பிரபாகரன் அவர்கள் ஓயாத அலைகள் -3இல் பெற்றுத் தந்த மாபெரும் வெற்றியின் மூலம் தமிழர்கள் ஒரு புதிய வாழ்வுக்கு ஒளியைப் பெற்றுள்ளனர். தமிழீழத்தின் கேந்திரப் பகுதிகள் எங்கும் பரவி ஆக்கிரமித்து நின்று தமிழர் தாயகத்தை சிங்களம் சிதைத்து வந்த நிலை நாம் பெற்ற வெற்றியினால் மாற்றப்பட்டுள்ளது. அழிக்கப்பட்ட பொருளாதார வளங்கள் மேலும் அழிவுக்குள்ளாகாமல் தடுக்கப்பட்டுள்ளது. அதேவேளையில் எமது விடுதலை குறித்த வேட்கையும் வேகமும் இன்னும் அதிகரித்துள்ளது. சர்வதேசரீதியில் எமது பிரச்சினையும் எம்மீதான கவனமும் அதிகமாகியுள்ளது.

உறுதியும் தீராத முயற்சியும் ஓர்மமுமாக நின்று பெற்ற இந்த வெற்றியோடு நாம் மேலும் தொடர்ந்து பயணிப்போம். எமது விடுதலையை வென்றெடுப்போம் செயலை ஆற்றுவதன் மூலம் நம் தேசத்தை ஆளும் வல்லமையையும் வாழ்வையும் பெறுவோம்.

ஓயாத அலைகள் -3 வரலாற்றுச் சமர் இடம்பெற்று ஓராண்டு நிறைவடைந்த நிலையில் காட்சிக்களமாய் இச் சிறப்பிதழ் விரிகின்றது.

# ஓயாத அலைகள் 3

## தமிழர் சேனையின் நகர்வு மார்க்கங்கள்

### ஓயாத அலைகள் 3இன் தென்முனைச் சமர்

முறிகண்டி
புதுக்குடியிருப்பு
முல்லைத்தீவு
முள்ளியவளை
அம்பகாமம்
கரிப்பட்டமுறிப்பு
ஒட்டுசுட்டான்
துணுக்காய்
மாங்குளம்
ஒலுமடு
கொக்குத்தொடுவாய்
விடத்தல்தீவு
கனகராயன் குளம்
புளியங்குளம்
நெடுங்கேணி
பாப்பாமோட்டை
பள்ளமடு
பெரியமடு
முன்றுமுறிப்பு
நயினாமடு
சன்னாசிப்பரந்தன்
ஒதியமலை
மண்கிண்டிமலை
திருக்கேதீஸ்வரம்
தள்ளாடி
மாந்தை
ஆண்டான்குளம்
பாலம்பிட்டி
பனிக்கைநீராவி
வட்டக் கண்டல்
தட்சணா மருதமடு
கீரிசுட்டான்
பாலமோட்டை
உயிலங்குளம்
மடு
இரணை இலுப்பைக்குளம்
ஓமந்தை
வவுனியா

ஆட்லறித் தளங்கள்

ஓயாத அலைகள் 3 படையணிகளின் நகர்வுப்பாதைகள்

முன்னரங்க காவலரண்கள்

பிரதான படைத்தளங்கள்

டிவிசன் தலைமையகங்கள்

### ஓயாத அலைகள் 3இன் வடமுனைச் சமர்

ஓயாத அலைகள் 3 படையணிகளின் நகர்வுப்பாதைகள்

விடுதலைப் புலிகளின் முன்னணி நிலைகள்

இராணுவ முன்னணி நிலைகள்

பாரிய இராணுவத் தளங்கள்

ஆட்லறித் தளங்கள்

இராணுவத் தளங்கள்

கண்டி வீதி



ஓயாத அலைகள் -3 நடவடிக்கையின் வடபோர்முனைக்கான தாக்குதல் திட்டத்தை விளக்கும் தளபதி கேணல் பானு.

தரையிறங்கத் தயாராகும் புலிவீரர்களுக்கு விளக்கமளிக்கும் கடற்புலிகளின் சிறப்புத் தளபதி கேணல் சூசை.

ஓயாத அலைகள் -3இன் தென்முனைப் படையணிகளுக்கு தாக்குதல் பற்றி விளக்கமளிக்கும் தளபதி கேணல் ஜெயம்.

தனங்கிளப்புச் சிங்கள இராணுவ முகாம்மீதான அதிரடித்தாக்குதல் ஒன்றிற்கான திட்டத்தை விளக்கி அணிகளைத் தயார்ப்படுத்தும் தனங்கிளப்புப் பகுதியின் தாக்குதல் தளபதி லெப். கேணல் வீமன்.

ஓயாத அலைகள் -3 சமரை ஆரம்பிப்பதற்காய் உறுதியுரை கூறி புறப்படத் தயாராகும் விடுதலைப் புலிகளின் தாக்குதலணிகள்.

களம் நோக்கி நகருகின்ற புலிகளின் கனரக ஆயுதக் குழுவொன்று.

புயல் எழுந்ததென பெண்புலிகள் அணி இங்கே.
இனி ஓயாத அலைகள் என பகைவன் பாசறை எரியும்.

கனகராயன்குளம் படைத்தளத்தினில் இராணுவத்தால் கைவிடப்பட்ட கவசவாகனங்களும் பெண்புலி வீராங்கனைகளும்.

கைப்பற்றப்பட்ட கனரக வாகனங்களுடன் விடுதலைப் புலிகளின் மகளிர் படையணிகள்.

கனகராயன்குளத்தில் 55வது டிவிசன் படைத்தளத்திற்கு அண்மையில் இராணுவம் கைவிட்டு ஓடிய கவசவாகனம் புலிகளின் கைகளில்.

கனகராயன்குள படை முகாமில் பெண் புலிகள்.

கனகராயன்குளத்தில் வெடித்துச் சிதறிய பாரிய ஆட்லறித் தளத்தைப் பார்வையிடும் மக்கள்.

கனகராயன்குள ஆட்லறித் தளத்தில் இருந்த எறிகணைகளை மீட்கும் மக்கள்.

மாங்குளம் கண்டி வீதியில் மக்களும் புலிகளும்.

கைப்பற்றிய கஜபாகு றெஜிமன்ரின் 8வது பட்டாலியன் நிலைகொண்டிருந்த தளப்பிரதேசத்தில் புலிகள்.

மீட்கப்பட்ட பாலம்பிட்டிப் பிரதேசத்தில் விடுதலைப் புலிகளின் படையணிகள்.



தனங்கிளப்புப் பகுதியில் படகுகள் மூலம் தரையிறங்கித் தாக்குதல் நடத்தியபோது விழுப்புண்ணடைந்த பெண் போராளியைப் புறக்களத்திற்கு எடுத்துச் செல்லும் சகதோழி.

களமுனைக்குச் செல்லத்தயாராகும் எல்லைப்படைவீரர்கள்.

கைப்பற்றிய சிங்கள இராணுவக் காவலரண் பகுதிகளில், விடுதலைப் புலிகளிற்கு உறுதுணையாகச் செயற்படும் எல்லைப்படை வீரர்கள்.

ஓயாத அலைகள் -3 படைநடவடிக்கையில் களம் திறக்க யாழ் கடனீரேரியைக் கடக்கும் விடுதலைப் புலிகளின் விசேட தாக்குதலணி.

வெற்றிலைக்கேணிக் களமுனையில் உருக்குலைந்துபோன கட்டடங்களிற்குள்ளும் உறுதிகுலையாது சண்டையிடுகின்ற விடுதலைப் புலிகள்.

# ஓயாத அலைகள் 3

வெற்றிலைக்கேணிக் களமுனையில் உருக்குலைந்த கட்டடங்களையே காப்பரணாக்கிக் கொண்டு சமராடும் வேங்கைகள்.

வெற்றிலைக்கேணிக் கடற்பரப்பில் மூழ்கடிக்கப்பட்ட இரு டோறா பீரங்கிக் கலங்களிலிருந்து மீட்கப்பட்ட ஆயுதங்கள்.



வெற்றிலைக்கேணிக் கடற்படைத்தளத்தில் ஓயாத அலைகள் -3 நடவடிக்கையின்போது கைப்பற்றப்பட்ட அதிநவீன கனோன் பீரங்கி.

# ஓயாத அலைகள் 3

பலத்த எறிகணைத் தாக்குதல், மோதல்களிற்கு மத்தியிலும் சக போராளிகளிற்கு உணவு எடுத்துச்செல்லும் பெண்புலிகள்.

கைப்பற்றிய சிங்கள இராணுவக் காவலரண் பகுதிகளில்,
விடுதலைப் புலிகளிற்கு [illegible] எல்லைப்படை வீரர்கள்.

# ஓயாத அலைகள் 3

புல்லாவெளி இராணுவத் தளம் மீதான தாக்குதலின்போது ஆனையிறவில் இருந்து உதவிக்கு வந்த இராணுவத்தின் உழவுஇயந்திரம் விடுதலைப் புலிகளின் R.P.G தாக்குதலிற்கு உள்ளான பின்னர்.

"பலவேகய -2" நடவடிக்கையின்போது ஆக்கிரமிக்கப்பட்டு இராணுவமுகாமாக மாற்றப்பட்டிருந்து பின் ஓயாத அலைகள் -3 நடவடிக்கையின்போது மீட்கப்பட்ட புல்லாவெளி கிறிஸ்தவ தேவாலயம்.

# ஓயாத அலைகள் 3

ஓயாத அலைகள் -3 வடபோர்முனையில் காயமடைந்த வீரர்களை மருத்துவ சிகிச்சைக்கு எடுத்துச்செல்லும் கிராமியப்படையினர்.

செம்பியன்பற்றுத் தரையிறக்கத்திற்குத் தயாராகும் விடுதலைப் புலிகளும்,
வழியனுப்பும் கடற்புலிகளின் சிறப்புத் தளபதி கேணல் சூசை அவர்களும்.

தனங்கிளப்பு இராணுவமுகாமின் கண்காணிப்பு நிலை ஒன்றின் மீது தாக்குதல் நடத்தும் விடுதலைப் புலிகளின் 50 கலிபர் அணியினர்.

தனங்கிளப்புப் பகுதியில் அமைந்திருந்த பலமான காவலரண் ஒன்றை தாக்கியழிக்கும் கவச எதிர்ப்பு அணியினரும் அதற்கு உறுதுணையாகச் செயற்படும் எல்லைப்படை வீரர்களும்.

தனங்கிளப்புப் பிரதேசத்தில் காவலரண்களிலும் பதுங்குகுழிகளிலும் நீர் நிறைந்திருந்த போதுங்கூட கைப்பற்றிய பிரதேசத்தைப் பாதுக்கவேண்டும் என்ற உறுதியுடன் நிலைகொண்டுள்ள புலிகள்.

ஓயாத அலைகள் -3 நடவடிக்கையில் கைப்பற்றிய கடற்படைத் தளத்தின் ராடார் நிலையம்.

# ஓயாத அலைகள் 3

பரந்தன் படைத்தளம் மீதான தாக்குதலில் கைப்பற்றிய எரிபொருள் நிலையக் கட்டடத்திற்குள் இருந்து ஆயுதங்களை மீட்கும் எல்லைப்படை வீரர்கள்.

சத்ஜெய இராணுவ நடவடிக்கையின்போது சிங்கள இராணுவத்தால் ஆக்கிரமிக்கப்பட்டு சின்னா பின்னமாக்கப்பட்டபின் ஓயாத அலைகள் -3 நடவடிக்கையின்போது மீட்கப்பட்ட பரந்தன் இரசாயனத் தொழிற்சாலை.

கைப்பற்றிய பரந்தன் பகுதி ஏ9 வீதியில் கண்ணிவெடிகளை அகற்றும் விடுதலைப் புலிகளின் கண்ணிவெடிப்பிரிவு பெண் போராளிகள்.

குடாரப்புவில் தரையிறங்கிய அணிகளுடன் தளபதி கேணல் பால்ராஜ்.

கைப்பற்றப்பட்ட ஆனையிறவுத் தளத்தில் புலிகள்.

ஆனையிறவு முகாமில் கைப்பற்றப்பட்ட 152 மி.மீ ஆட்லறியை, தமிழீழத் தேசியத் தலைவர் அவர்கள் பார்வையிடுகின்றார்.

"ஓயாத அலைகள் -3 வரலாற்றுச் சமர் நடந்து முடிந்து ஓராண்டு நிறைவடைந்துள்ள நிலையில், காட்சிக்களமாய் இந்நிழற்படத் தொகுப் பானது எரிமலையின் சிறப்பு இணைப்பாக உங்கள் கரங்களில் தவழ் கின்றது.

குலையாத கட்டுப்பாடும், வழுவாத நேர்மையும், தமிழனின் வாழ்வு நெறி பிறழாத ஒழுக்கமும், சளையாத போர்த்திறனும், இளகாத வீரமும், யாரும் நினையாத வகையாக- எவரும் மிகையாக நேசிக்கும் உயிரை இயல்பாகத் தூக்கி எறியும் கலையாத தேசப்பற்றும் சுதந்திரத்தில் தணி யாத தாகமும் கொண்டோரால் இனத்தின் விடுதலைக்காக மேற்கொள் ளப்பட்ட சாதனைகளில் குறிப்பிடத்தக்க ஒன்றே ஓயாத அலைகள் -3.

இவ் ஆவணத் தொகுப்பானது காலங்காலமாக எமது எதிர்காலச் சந்ததிக்கும், உலகிற்கும் ஒரு தேசிய இனத்தின் மகத்துவத்தையும் அந்த இனத்தினை வழிநடாத்துகின்ற தலைமையின் ஆளுமையைச் சொல்லும் விதமாய் பேணிப் பாதுகாக்கப்படவேண்டும்."

எரிமலை நவம்பர் 2000 சிறப்பு இணைப்பு
இது ஒரு தாய்மண் வெளியீடு

